உ

ஓம்

ஸ்ரீ சாலைவிநாயகர் துணை






# தருமபுரி சாலைவிநாயகர் ஸ்தோத்திரம்.

இஃது

தருமபுரி போர்டு ஹைஸ்கூலில்
தமிழ்ப்பண்டிதராயிருந்து இப்போது திருப்பத்தூர்
முனிசிபல் ஹைஸ்கூலில் தமிழ்ப்பண்டிதராயிருக்கும்
ஸ்ரீமான் முருகைய்ய முதலியாரவர்களால்
இயற்றப்பட்டு

தருமபுரி கதர் ஜவுளி வியாபாரம்
**D. V.** சக்ரவேலு செட்டியாரவர்களால்
பிரசுரிக்கப்பட்டு

...ி சஞ்சீவி அச்சுக்கூடத்திற்
...ிப்பிக்கப்பட்டது.

---

**1924** [விலை **6**-பை.



## காப்பு.

சீதக் களபச் செழுந்தா மரைப்பாதம்
ஓதி யுலக முயச்செய்யும்--சோதித்
தனிநா யகனுமையின் றருள்சூழ்ந்து கையிற்
கனியேந்து மெங்கள் களிறு.

உ

ஓம்

விநாயகர் துணை.

# தருமபுரி
# ஸ்ரீ சாலைவிநாயகர்
# ஸ்தோத்திரம்.



1. ஓங்காரமான வொரு முதலே விசும்பில் வாழ்
உம்பர்கள் தமக்கு முதலே
உலகம் படைத்தருளு முதலே படைப்பவைகள்
ஒழியாதளிக்கு முதலே
தேங்காத வண்ணந் துடைக்கு முதலே மூடு
திரை போலு நின்ற முதலே
தெள்ளித் தெளிந்து நிறை கடன்மடை யினொழு
தெவிட்டாதளிக்கு முதலே [மருள்
நீங்காமனுன் னுவார் நெஞ்சுத்து னின்றவர்
நினைப்பவை யளிக்கு முதலே
நீசப் படிற்றொழுக்கத்தனே னுரைமாலை
நேசிதா வணியு முதலே
தாங்காத தண்ணிடை வல்லமையின் முதலே மருத்
தருமபுரி தென் கோடியில்
சந்த மறை முந்து பொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

2. தேயாத வினைகள் பொடி பட நூறு தெய்வமே
தேடவெளிதாங் தெய்வமே
சிந்தித்த தொழிலுக்கு முன்னர்வரு தெய்வமே
தினமடியார் தொழு தெய்வமே
மாயாத வாழ்வளித் தாள்கின்ற தெய்வமே
மகிமைபெறு மாத் தெய்வமே
மறைமுடியி லொளிர்கின்ற தெய்வமே நாயேனை
வணங்குவிக்குந் தெய்வமே
காயான வன்மனங் கனிவித்த தெய்வமே
கண்மணியி லொளிர் தெய்வமே
கருணையென மும்மதக் கலுழிபாய் தெய்வமே
கருத வரமருள் தெய்வமே
தாயாகி யடியேனை தாங்கவரு தெய்வமே
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

3. உள்ளபடி யுன்னுவா ரொருபோது மறவாத
வொருவன் முன் பெறுபிள்ளையே
உமைகௌரி யபிராமி சிவகாமி மலைவல்லி
யுச்சி மோந்திடு பிள்ளையே
புள்ளிபெறு மரவணையி லறிதுயில மர்ந்தருள்
புண்ணியன் மாப்பிள்ளையே
பூம்புனங் காத்த குற வள்ளிகாதற்கு முன்
பூத்து மூத்தெழு பிள்ளையே

பள்ளி பொழி லாலயஞ் சந்தி கரை மந்தை யழி
பாலெழுந் தருள்பிள்ளையே
பஞ்சினடி வஞ்சியிடை கொஞ்சு வல்லபை யம்மை
பாங்கனுகிய பிள்ளையே
தள்ளா விருந்தினரோ டெல்லாரு முண்டுகளி
தருமபுரி தென் கோடியில்
சந்த மறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

4. பாச மங்குச மேந்தா கையனே கைகளாற்
பருவரை யெடுத் தசைத்தோன்
பண்டை நாலோலிடப் பந்தாடு கையனே
பார்ப்பன மகன்ற னக்காப்
பூசையில் படைத்தவின் னமுதம்வாய் பெய்யுமொரு
பூங்கையனே யானைமேல்
புரவிமேல் கைலாய கிரி சென்றவர்க்கு முன்
போகவென வெளவையாரை
பாசமொழி வித்தாளு கையனே பத்தியால்
பணிபவ ரெவர்க்கு மின்னே
பலபொருளு மீந்தருளு கையனே யுனையலாற்
பாருலகில் தெய்வமுண்டோ
தாசரா யுன்னடியி னேசமுள்ளவர்கள் வாழ்
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்து பொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

5. கொஞ்சமொழி வஞ்சியர்கள் வஞ்சனையிலே செயுங்
கொலையிலே புலைதன்னிலே
கூசாது சொல்லுபல பொய்யிலே யிம்மியுங்
கொடுக்காத வீணையதிலே
அஞ்சிலே பமையாம லையகோ வைம்பதிலு
மமையாத வறிவதனிலே
ஆசைப் பெருக்கிலே மோசச் செருக்கிலே
அலையுமொரு பாவி யினிமேல்
நெஞ்சிலே மறவாமல் நின்னடிக ளிரவுபகல்
நினைக்குமொரு காலமுண்டோ
நெல்லுக்கு ளரிசிபோல் சொல்லுக்குளே பொருளை
நோதாக் காண்பதுளதோ
ஞ்சமென நின்னடி யடைந்தெனை யாண்டருள்செய்
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

கடலைபவல் பொரிபொடியல் வடைபயறு பாயசம்
கசியு மதிரச மோதகம்
கற்கண்டு சர்க்கரைப் பாகுதேன் குழல்கட்டி
கனிந்த தீஞ்சுவை யாதிய
டலைநிறை தெங்கினொண் காய்வாழை மாம்பழம்
கொழுஞ்சுளைப் பலவு கொய்யா
கோதிலா விளவி னருள் கனி சம்புவின் கனி
குறைவறு கரும்பினி ரசம்

மிடலமை துதிக்கைபால் வாரி கவளங்கொளும்
விழுமத மொழுகு களிறே
வேண்டித் தினம் பணியு மன்பருள மெண்ணியவை
வேண்டியாங்கே யளிப்போய்
நடவிதிவாய் சிறுவர் சிறுதே ருருட்டுமெழில்
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.



7. பசியென வந்தவர்க் கன்னம் பகர்ந்திடும் பண்புதா
பார்கத்தில்
பலவுயிரு மெந்தனுயி ரமென மதிக்கின்ற
பரிவுதா பரதாரமேல்
கசியாத மனதுதா கற்றோர் மதிக்கின்ற
கல்விதா செல்வமுதுதா
காணாது காணுநின் காட்சிதா மாட்சிதா
கவலைதீ ரின்பமதுதா
விசியுரவி னோடென்று மருநிடையி லேநுழையும்
வேணு கோபாலன் மருகா
வேலாயுதக் கடவுள் மாலாக வள்ளியிடை
வேழமாய் வந்தமுதல்வா
சசிசேகரன் பெற்ற செல்வமே செல்வமார்
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

8. பெற்ற தாயன்றியே பிள்ளைக்கோ ராதரவு
பேருலகி லில்லை யென்பர்
பித்தனானாலுமுன் மத்தனானாலு மவள்
பேணாது விடுவளோதான்
உற்றகுறை யின்னதென் றொழியாது சொல்லாத
ஊமர்போல் சும்மாயிருந்
தொருபோதுநின் கோயில் சூழவந்துன்னை
முச்சரிக்காத பேதை
குற்ற மெத்தனையுள்ள வத்தனையுமே செயுங்
கொடுவினைக் குறையுளானேன்
கூற்றனன்னாள்விடும் பாசக்கயிற்றினைக்
கூசியே வந்தடைந்தேன்
சற்றுநீ மன மிரங்கா யென்னி லுய்வனோ
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை மூத்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

9. கலைகள்பல கற்கிலென் கவிநா னுரைக்கிலென்
கவிராஜ னென்ன வுலகில்
கற்றோர் மதித்திடக் காலங் கடக்கிலென்
கருது நூறுண்டு வயதும்
நிலவிலென் சகல சம்பத்தோடு மென்மேலு
நீடித்திருக்கிலென்னே
நிலவுபொழி வெண்குடைக் கீழிருந்த ரசர்தொழ
நேமியை யுருட்டிலென்னே

பலமலர்களா லருச் சித்தனடி தொழுதிருகண்
பனிநீரு குத்து நின்றே
பரம கருணாநிதி கணபதி யென்னமுன்
பணிவார்தமக் சீடாமோ
தலையலங்கார மாமங்கையென நீடு பொழில்
தருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்து பொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

10. விலைமதிப்பில்லாத மாணிக்கமே வாழி
மெய்யனே வாழி வாழி
வித்தகா வாழி பரிசுத்தனே வாழியுயர்
விண்ணவர்க் கரசுவாழி
கலைகளுண ரந்தணாவாழி யுலகுக்கெலாங்
காவலா வாழி வாழி
கைம்மாறு கருதாத மழைமேகமே வாழி
கருது செஞ்சாலி வாழி
உலைவிலா வெவ்வுயிரு மாயினோய் வாழி யென்
னுடைய துணை நட்பு வாழி
உருக்கமோ டெனைப் பெற்றவன்னையே வாழியுயர்
ஒப்பிலா வப்பவாழி
தலைமீது னிணையடிகள் சூடினேன் வாழிநற்
றருமபுரி தென்கோடியில்
சந்தமறை முந்துபொருள் சுந்தரிதன் மைந்தவருள்
சாலைவாழ் தந்திமுகனே.

முற்றிற்று.

# தருமபுரீஸ்வரர் கீர்த்தனம்.

தருமபுரியில் பலவருஷங்களுக்குமுன் ஓவர்சீயராயிருந்த
ஸ்ரீமான் முருகேச முதலியாரவர்களால்
இயற்றப்பட்டது.

இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்த ஏழைமீது இன்னங்கருணையில்லை
எப்படி நானுய்குவேன்.

அநுபல்லவி.

எந்தவுலகத்துக்கும் ஈசனுய்விளங்கும்
கந்தனைப்பெற்ற கடவுளேயுனக்கு (இந்த)

சரணங்கள்.

அழலுருவாயன்று அருணகிரியினின்று
கழலணிபதத்தையும் நிழலருள்சிரத்தையும்
கரணவேமறையோனுங் கரியமாலுஞ்சென்று
நாணவேநின்றிடுஞ் சாமம்போற்றியநாதா -(இந்த)

நல்லாளைக்கொடுவென்று வல்லாளனிடஞ்சென்று
சொல்லொணுத்துயர்தந்து ஒல்லாமையாக்கியன்று
இல்லாளையவன்கர வெல்லாநின்செயலென்று
வில்லார்மன்னவனுக்கு விமலாசேயாயுதித்தாய் -(இந்த)

வெள்ளியங்கிரியை மெள்ளத்தனதாக்கக்
கள்ளனுக்கட்சகன் கருதிவேள்விசெய்ப
தள்ளியவனைச்சங்கரித்துத் துயர்தீர்த்த
வள்ளலேதர்மபுரி அமர்சிவவேந்தே -(இந்த)